உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.



# திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி,

# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி,

# திருவாரூர் மருந்து வெண்பாமாலை.

இவை

திரிசிரபுரம், வித்துவசிரோமணியாகிய

ம-௱-௱-ஸ்ரீ,

**சி - தியாகராஜசெட்டியா**

**ரவர்களால்**

இயற்றப்பட்டு,

கும்பகோணம்

கவர்ன்மெண்டு காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

**வே - சாமிநாதையரால்**

சென்னை சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

1888.

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.



# திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி



## காப்பு.

பூமேவு செம்பொற் பொதுவினடிக கும்பெருமான்
பாமேவந் தாதி பகரவே—நாமேவு
மறபகத்தின் மேவி யமரு மொருகோட்டுக
கறபகத்தி னம்பொற் கழல்.

## சமயாசாரியர்.

ஈண்டபுகழ்க் காழி மறைக்குழவுஞ் சூலைகொடுந
தாண்டவர சுப்ரவ லண்ணலு - நீண்ட
திருவாத வூர்வேதச் செம்மலுமெஞ் ஞான்று
மொருவாத வூரொன் னுளம்.

## தீக்ஷாகுரு.

துன்னுபெருஞ் செல்வத் துறைசை கயிலையென
மன்னி யமருமெழின் மாணிக்க - மின்னுபுகழ்ப்
பீடார் குருசுப் பிரமணிய தேசிகன்சீர்
பாடாா பசத்தென் பயன்.



# நூல்.

சீர்பூத்த வம்பலத்திற் றேவிமலர்க் கண்களிக்க
நார்பூத்த வின்ப நடநவிலுங் - கார்பூத்த
கண்டன் மறைச்சிலம்பு காட்டு மலர்ப்பாத
முண்டுதுணை நாயே னுயிர்க்கு. (௧)

உயிரோ யுயிர்த்துணையே யுண்ணத் தெவிட்டா
வயிரோதீங் கண்டே யமுதே - செயிரோ
மருவார்ச்செந் தேனேபோன் மன்றத்தி லாடு
மொருவாயான் றொண்ட னுனக்கு. (௨)

உனக்கடிமை யானென்று மோங்குதில்லை நமா
வெனக்கிறைநீ யென்று மிசைப்பேன் - மனக்கிசைய
உன்னை யடியே னொருநாண் மறப்பேனோ
வன்னையே யப்பா வருள (௩)

அருட்பிழம்பை யானந்த வாழ்வையஞ் ஞான
விருட்பிழம்பை பாற மிளைத்த - தெருட்பிழம்பை
யுற்றோரே பற்றுமன்றத் தும்பர் பெருமானை
மற்றோரே பற்ற வலர். (௪)

வல்லார் முலைச்சசியோன் வாழ்வுமயன் மால்வாழ்வும்
பல்லார் பணியம் பலக்கூத்த - னெல்லார்
மலரடியை வாழ்த்தி வணங்குபே ரன்ப
ரலாபெரிய வாழ்விற் கணு. (௫)

அணுமலை யாக வணுவாய மலையே
நணுமணு வாக நகமாய்ப - புணரவல

னேவனெழிற் பொன்மன்றத் தின்படஞ் செய்பெருமா
னேவனவ னும்பர்க் கிறை. (சு)

இறைவா வுவந்தேத்து மின்பவன்ப ருள்ளத்
துறைவாய்நீ யெல்லா முணர்வாய் - மறைவாழ்த்தும்
பொன்னம் பலவாநின் பூங்கழல்சேர் நாயேனுக்
கின்னம் பலவா விடர். (எ)

இடர்கெடுமா றெண்ணுதியே லென்னினிய நெஞ்சே
படர்சடைமேற் கங்கை பனிக்க - நடநவிலு
மம்பலத்தான் மேருவில்லாக் கம்பலத்தா னின்பாய
நம்பலத்தான் சீரோ நவில். (அ)

நவிலுமறைக ணெட்டாத நல்லமணி நாலவா
கவிபுகலக் கேட்டுக் களிக்குஞ் - சவிமணிசீர்
குன்றுப்போ லின்பங் கொடுக்குமணி செங்கனக
மன்றுடி மெய்கண் மணி. (கூ)

மணிகண்டா வம்பல வாணு வருத்தும்
பிணிகண்டு நெஞ்சிரக்கம் பேணுப் - பணிகண்ட
பூணுப்பொன் மன்றுடும் புண்ணியா நீசற்றுக்
காணுப்பா யேன்மறைந்த கண். (௧0)

கண்ணொளிமாய்த் தன்பர் கவிபுகலக் கேட்டடியேன்
கண்ணொளி மாய்க்கக் கருதினுய்- பண்ணொளிரப்
பாடவறி யேனம் பலவரதா நின்னடனை
நாட வொளிர்கண் ணலம். (௧௧)

நலமொன் றுனகருளைப்பே னன்றுவே கேட்டி
பலமொன்று பேரம் பலவன் - வலமொன்று
சூலத்தான் மால்குருதி துன்னிநிறை யுங்கரக
பாலத்தான் பொன்னடியே பாடு. (கஉ)

பாடே னினியகவி பாடித் திருமுன்னின்
றாடேன் மலர்கொண் டருச்சியே - னீடுமறை
போற்றுகழல் சென்னி புனையேன்பொன் னம்பலவா
சாற்றடியே னுய்யுஞ் சரி. (கங)

சரிந்த பவளச் சடைதிசை யெல்லாம்
விரிந்தாடக கங்கைதுளி வீசப் - புரிந்தநட
மன்றத்தான் முப்புரங்கண் மாயத் தவராம்பொற
குன்றத்தா னெங்கள்குணக் குன்று. (கச)

குன்றெடுத்தான் காணுத கோமான்பொற் குஞ்சிதத்தாண்
மன்றெடுத்து நின்றாடு மாதேவ - னென்று
மிறைவ னெளியேமுக கேத்துமறை தோறு
நிறைவன் பொருளாகி நின்று. (கரு)

நின்றேன் றிருமுன்னர் நின்று நெடுங்கருணைக்
குன்றே யெனவழைத்துக் கும்பிட்டேன் - மன்றேய்ந்த
வானந்தக் கூத்த னழியாத முத்திநல
மேனந்த நல்கா னெனக்கு. (கசு)

கும்பிடவே முத்திநலங் கூடு மெனமறைக
ணம்பிடவே சாற்றுகின்ற நன்மையினென் - கம்பமுவெங்

தியெழுத்தை நீரெழுத்தாச் செய்பிரமா வோரைந்து
பாயெழுத்தான் சிற்றம் பலம். (௧௭)

சிற்றம் பலத்தாடுஞ் செல்வா சிறியேன்செய்
குற்றம் பொறுத்தாள்வாய் கோமானே - குற்றம்
பொறுப்பாயேற் பொல்லான் பொறுத்தானென் றுன்னை
யொறுப்பா ரெவரிங் குளர். (௧௮)

உள்ளமே நீகொ ளுறுதி யிதன்மேலென்
கள்ளமே யென்றுங் கலவாது - வெள்ளஞ்
சடையணிந்த வம்பலவன் றாட்கமலப் போதைத்
தொடையணிந்த பாவாற் றுதி. (௧௯)

துதிபபோ மவன்புகழே சொல்வோமோ வாது
மதிப்போமெஞ் ஞான்று மறவோம் - கதிக்கே
புகவிடுமோ மன்றுடும் புண்ணியனெல் லோரும்
நகவிடுமோ நெஞ்சே நமை. (௨0)

நமர்கா ணமனுக்கெ னம்மிடத்து வேலை
யமரர்பணி தென்புலியூ ரத்தன் - நமரானேம்
அஞ்சா தடர்த்தா லறைவோ மயர்த்தனைகொ
லெஞ்சாதெண் மாணிசெய லென்று. (௨௧)

என்பரவம் பூண்ட விறையைப்பொன் னம்பலத்துத்
துன்பகலக் கண்டு தொழுதேத்து - மன்ப
ரடிட்பங் கடப்போதை யம்பொன் முடியா
முடிப்ப ரமரர் முடிக்கு. (௨௨)

முடியாப் பெருவாழ்வே முன்னவா வென்று
வடியாத வானந்த வாரி - கடியாரும்
பூங்கொன்றைத் தாமா புலியூராய் நாயேனைத்
தாங்கொன்றைத் தாநீ சரண். (உங)

சரமொன்று தொட்டுத் தழல்விழிக்கு நேராய்ப்
புரமொன்ற வெய்த புதல்வன் - நிறமொன்றக
காவானைக் காவென்றல் கைவிட்டுத் தென்புலியூர
மூவானை நன்னெஞ்சே முன்னு. (உச)

முன்னுவாய் நெஞ்சே முடிந்தபவ மெத்தனையோ
வின்னும் வருபவங்க ளெத்தனையோ - பொன்னம்
பலவனைக்கண் டேத்திப் பவந்தொலைத்தல் செய்யா
தலமருவா யென்னோ வறை. (உரு)

அறைகூவி நின்றே யமருவர் தாண்ட
விறைவா பலவ ரிறந்தார் - நிறையோத
நஞ்சமுண்டுஞ் சாவாத நம்பனைப்பொன் னம்பலத்துத
தஞ்சமென நெஞ்சேநீ சார். (உசா)

சாரும்பே ரின்பாலந் தாரணியீர் நும்மைவிட்டுப்
பேரும் பிறவிப் பெருந்துன்பம் - யாரு
மதிக்கும் பெருமான்செய் மாணிக்கக் கூத்தைத்
துதிக்கும்பொன் மன்றிற் றொழின். (உஎ)

தொழுதுந் துதித்துந் துகளிலன்பு தாவென்
றழுதுநினை யன்ப ரடைந்தார் - முழுது

மறமே புரிவேன் மறலிக்கென் சொல்லே
னறமே திகழ்புலியூ ராய். (உசு)

ஆயேன்சி வாகமத்தை யாய்ந்தார் பணிபுரியேன்
பேயேனுய்ந் தார்போற் பிதற்றுவேன் - றாயேனு
மல்லேனெவ் வாறுன்னை யாய்மலர்கொண் டர்ச்சிப்பே
னல்லாய்பொன் னம்பலவா நான். (உகூ)

நாவிருக்க நீயிருக்க நாமம் பலவிருக்கப்
பாவிருக்க நின்பெருஞ்சீர் பாடிடேன் - பூவிருக்குங்
கொன்றையாய் மன்றிடைநின் கூத்துந் தரிசியே
னென்றையா யானுய்கு வேன். (௩௦)

ஏனோ பலபவமேற் றின்னு வுறல்வேண்டு
மானேயென் கண்ணுண் மகிழுவே - தேனேதா
னென்னும் பிரான்மன் றிடைச்செய் நடங்கண்டு
மன்னும்பே ரின்படையா மல். (௩௪)

மலநோய் துரக்கு மலிபவங்கண் மாற்றுங்
கலர்காணு தென்றுங் கரக்கு - மலரிமையக
குன்றின் முளைத்த கொடிபடர்ந்த வாமத்து
மன்றி னடிக்கு மருந்து. (௩௨)

மருந்தே பவப்பிணிக்கு மன்றத்தி லாடு
மருந்தத் தெவிட்டா வமுதே - பொருந்தார்
புரமெரித்த முக்கட் புனிதாநிற் பாட
வரமடியே னுக்கருளு வாய். (௩௩)

வாரணிந்த கொங்கை மலைக்குமரி கண்டுவக்கச்
சீரணிந்த மன்றிற் றிருநடனஞ் - சீரணிந்த
பெம்மான் புரிவன் பெறும்பே றிதன்மேலே
யெம்மாகண் டேத்த லழகு. (௧௪)

அழுத மறைமழவிற் கம்மை முலைப்பால்
பழுதகல நந்தபைம்பொற் பாண்டங் - கழுவுபுனல்
உண்ணுந் தவமேனு முண்டோபொன் னம்பலவா
வெண்ணுமடி யேனுக் கியம்பு. (௧௫)

இயலார்ந்த பல்புலவோ ரேத்துமிறை வாம்பெண்
பயலார்ந்த மேனிப் பரமா - மயலார்ந்தோர்
காணாத வம்பலவா கன்னெஞ்சே னன்பில்லே
னாணா தடிமையென்பே னான். (௧௬)

நானே தவமுடையே னானே தவமுடையேன்
றேனே யமுதே செழும்பாகே - யானைத
செல்வமே யென்றுகவி செப்பச்சிற றம்பலத்தா
னலவரந்தந் தாண்டமையா னன்று. (௧௭)

நன்றே புலவீர் நலமிலாப் பேதையனாக
குன்றேய்பு யாவென்று கூறுவீர - கொன்றைமலார்த்
தாமத்தாய் தென்புலியூர்ச் சங்கரா வெற்பரசி
வாமத்தா யென்றன் மறந்து. (௧௮)

மறந்துமினை யன்றி வழுத்துமோ வென்று
விறந்து பிறப்பானா யென்றுஞ் - சிறந்ததே

மாங்கனியுண் வாயுணுமோ வன்காஞ் சிரங்காய்போன்
ஞெங்கனிசர் மன்று யுவந்து. (கூகூ)

உவந்துகினைப் பூசை யுஞற்ற லொழிந்தேன்
பவந்தொலையு மாறு படமேன் - றவந்தானகு
சிந்தியேன் றென்புலியூர்த தேவாநின் சேவடிகளை
வந்தியே னுய்வேன்கொன் மற்று. (சO)

மற்றென் னுறல்வேண்டும் வந்தித்தான முதநிலகு
சிற்றம் பலத்தாடுஞ் தேவாபிரா - னுறறருளவ
னென்றால் விளையா ரெவரோ மடநெஞ்சே
சென்றாடல் கண்டுகதி சேர. (சக)

சேரார் பவப்பெருநோய் தீராரெவ் வாறநதோ
வாராபே ரானந்த வாரிபுக - வீரார்நத
செஞ்சடையா னிருவா சேவிகக மனாறு
மஞ்சுடைய தில்லை வனம். (சஉ)

வனமடைந்து புன்சருகு வன்காய் கிழங்குண்
டினனெதிர்நின் றோகா லெடுத்துங் - கனலிடையே
சோநதுந் தவஞ்செயலென் றிலலைமன்றி லெம்பெருமா
னார்நதடங் காண லயர்ந்து. (சஙூ)

அயில்வே லனுககு மரிமதர்க்கட் பாவாய
மயிலேப்மென் சாயன் மடநதாய் - குயிலேயின்
சொல்லா யெனபலகாற் சொல்லுமபொன் மன்றாடல்
வல்லா யெனிற்குறையென் வாய்ககு. (சச)

வாய்மை யன்பு சற்றுமிலேன் வன்னெஞ்சப் பாறையிடைச்
சேய்மையின்றிப் பூத்துத் திகழுமோ - தூய்மைநிகழ்
குன்றாத பேரன்பர் கோதிலுள வாவிமலா
மன்றாடி பூந்தா மரை. (௪௫)

மறையெகினம் வான்பறந்தும் வனநிமண் கீண்டும
பிறைமுடியுந் தாளும பெறும - னிறைபெருநான்
பற்றாத சிற்றம் பலத்துளெங்க னின்றாடி
முற்றா முலையாய் மொழி. (௪௬)

மொழியத் தெவிட்டா முதல்வநின்சீர் முற்று
மொழியப் புகலவேனென் றுன்னி - னிழிவுடைய
சிற்றெறும்பு வாரிமுற்றுஞ் சேரவுண்ண வுன்னுதே
சற்றுமைசிற் றம்பலநா தா. (௪௭)

தாமரைக்கண் குன்றொருவர் தாளிட்டார் மற்றொருவர்
மாமலராக்கண் குன்கண்ணவைத்தாரிவரு - ளாமொருவர்
பொன்னடிவைத் தாயொருவர்ப் போககினை யாழிகொடுத்த
தென்னவற மன்றுடையா யீது. (௪௮)

ஈதே கருணை யிறைவாபொன் னம்பலவா
தீதே தமியனனி செய்திடினும் - போதே
யனையநின்பொற பாத மடைந்தபின்னுந் தீய
வினையகற்றி யாளா விடின். (௪௯)

விட்டோம் பயனில்லா வீண ருறவெல்லாந்
தொட்டோமின் பஞ்செய்யுந் தொண்டுகளை - நட்டோநற

ஞெண்டா பெருங்குழுவைத் தூய நடராச
னண்டாதொழு மன்ற மடைந்து. (ருo)

அடைந்தா ரெவரேனு மானந்த வெள்ளங்
குடைந்தாட வம்மின்கள் கும்பிட் - டடைந்தோர் -
நம்பிறவி யோட்டுமின்க ளென்று நுவலுதல்போ
லம்பலத்தி லாடு மரன். (ரு௧)

அரவமைந்த செஞ்சடையா னம்பலவ னென்றே
புரவமைந்த வானனமை பூண்டு - மிரவமைந்தே
பேறுறும் நிலைகலங்கை யெண்ணுன கறந்செயபோ
கூறுறுனுண் ணுணங் கொள. (ருஉ)

கொள்ளக் குறையாத கோதி லருட்கடலே
யெள்ளப் படாதபே ரின்பமே - வெள்ள
முடித்த சடைமுடியாய முன்னவா மன்றி
லாடித்தகப் ஞேயற்கு நல்கு. (ருங)

நல்குவா யென்றுன்னை நம்பினே னன்பருளந்
நலந்தமிரு ளோட்டு மவிரொளியே - மல்குதிருச்
சிற்றம் பலவவருள் செயயாய் சிறியேன்செய
குற்றங் குணமாகக் கொண்டு. (ருச)

கொண்டோம்பொன் மன்றுடிங் கூத்தன் கழல்சிரமேல்
விண்டோ டெடுந்துயாசெய் வெம்பிறவி - யண்டருளோ
ரம்பேறி யார்பெறுரா நாடித் துருவிடினும்
வம்பேறு கொங்கைமட வாய். (ருரு)

வாயார வாழ்த்துவார் மன்னுநடங் கும்பிடுவார்
தோயாவா நந்தந் துளைகுவா - ரோயாது
நின்றுருகு வாரைய நின்னன்பர் யானோபொன்
மன்றுபுக நின்றுண் மதித்து. (ருகா)

மதித்தவழுஞ் செஞ்சடையும் வானபுலவர் பாடுந்
துதித்தவழும் பூந்தாளுந் தோற்றிந - கதித்தவழு
மம்பலத்தி னின்றாடு மப்ப னயன்றிருமால
வெம்பிவிண்மண் கீள விடுத்து. (ருஎ)

விடவரவஞ் சென்னி மிலேந்து புலியும்
படவரவுங் கண்டு பணிய - நடநவிலவோ
னம்பலங்கண் டேத்து மதுவே யறிஞரடை
செம்பலன்வே றென்னெஞ்சே தோ. (ருஅ)

தோநதுணாநந மெய்ஞ்ஞானச் செல்வ மொலாஙகூடி
வாரந்தபுகழ் வாயார வாழ்ததியே - ரோந்துநின்றுண்
மன்றடைந்து கும்பிட்டு வாழ்வுறுா யானைய
வென்றடைவே னின்று ளினை. (ருகூ)

இணையில்லா நின்னன்ப ரெய்தும் பெருவாழ்
வணையநா யேனொண்ணி னைய - டணையிற
குரண்டம்வான் கங்கைநதி கூடநீளு யாதோ
வரண்டவாத் தென்புலியூ ராய். (சாo)

ஆயா மனையி லளிதிருடிக் கட்டுண்ட
மாயனபொன மன்ற மருவியுந் - தாயனையான்

றனைகரும் பிட்டின்பஞ் சாரா திணுந்துயில்வா
னென்ன புதுமை யிது. (சா௧)

இதுவோ பெருமை யிரணியமன் றாடும்
விதுவேய் சடில விமலா - மதுவேயசினை
பொனனிதழிப பூந்தா புரிநதருளாய செம்பவள
மனனிதழி யுய்யும் வணம். (சா௨)

வண்ணங் கரிய மணிமிடற்றாய் துனபுறுவே
னெண்ணந் தெரியா திருககின்றாய - பண்ணைவயல்
ஆமனறத் தாடு மரசே நினைபெலலா
மோாபெருமா னென்பதெவ்வா றோது (சா௩)

ஓதா துணாநத வொருவருண ஞானபபாற
கோதாரா மற்கொடுதந கோமானே - தீதாரா
மன்றாடு மாமணியே மாணிகக மேயடியேனா
குனறுநோய தீாத்தடிமை கொள. (சா௪)

கொண்டா லெனையடிமை கோபிபப ரோவடியாா
தண்டா வருட்பெரிய சாகரமே - கண்டாா
பிரியாப்பொன் மன்றாடும் பெம்மானே தீாநோ
யெரியாய் வருந்து மெனை. (சா௫)

என்னைநின் னுள்ள மிரங்கா திருக்கின்றாய
பொனனே மணியே புகழமுதே - யின்னே
யெனைநோய்தீர்த் தாளின்மண் ணீசா நினைகருப
பினைவேறுண் டோபெருஞ்சீா பேசு. (சாசா)

பேசவே னின்பெருஞ்சீர் பேயேனை யாட்கொள்வாய்
கூசுவேன் மற்றையர்சீர் கூறவே - நேசமொடு
நமபினனைக் கைவிடுத லல்லறமோ மன்றுடைய
எமபெருமா னீசற் றிசை. (கஎ)

இசையார்ந்த தென்றில்லை யீசா நின் னனபா
நசையார்ந்த பாதக னவில்வார் - வசையார்ந்த
நாயே னெவ் வாறு நவிலுமன் புள்ளேனே
றீ யெனின்றன் செயவேணி செப்பு. (கஅ)

செப்பும் பலமறையுந் சென்றேத்துந் தில்லைவனத்
தொப்புமுயர்வு மொருவிநிற்கு - மப்பனே
நின்னடிசேரன றன்புறுத லோகண்டான மற்றையார்
உன்னைமே சாரோர் வுரை. (கக)

உரையாத பொன்னேனே யொளிர்சாணை யிட்டுக
கரையாத மாணிக்கக் கல்லே - விரையார்ந்த
வார்குழலா ளோக்கப்பொன் மன்று டருட்கடலே
யார்துணைநா யேனுக் கருள். (எ0)

அருளே யுருவா யமைந்திடப்பா னின்று
பொருளாய்நின் னுடல் புரிந்து - தெருளாய
நோக்கம்மை நிற்கு நுவலாளோ மன்றுடை
காக்கவெவ்ன்றே யென்றுயரங் கண்டு. (எக)

கண்டுந்தே னும்பாலுங் காமர் பசுங்கிளியும்
கொண்டுவமா னஞ்சொல்லக் கூடாத - மண்டுசுவை

யென்றுப்சொ னின்செவிகட் கேறுமை யென்கொடுமை
மன்று யமரர்தலை வா. (எஉ)

வாமான் மறையாக்கொண் மாதேவா மன்றுடைய்
கோமானே யெங்கள்குணக் குன்றமே - யேமாந்து
நின்னருளை நாடியே நிற்பே னடைந்திலேன்
என்ன வறுமை யியம்பு. (எங)

இயம்ப னினியினிக்கு மின்னமுதே பூவா
சயனுசுலவு தில்லைக் கரும்பே - நயக்குலவ
நினைப் புகழு மெம்பாக் கியம்பெற்றேன
எனனை குறைசொ லெனகரு. (எச)

எனக்குநின் பூந்தாளன் பெய்தாத தென்கொல்
மனக்கின் பருளு மணியே - புனக்கொன்றைப்
பூந்தாமா மனறுடும் புண்ணியா வானமர
சேந்தால கயிலையிறை யே. (எரு)

ஏதோநின் ஞமை மியம்பத் தெரிந்திலேன
நீதோவு பாடலெங்ஙன் செபபுவேன் - மாதோடு
நின்றுதில்லை மன்றுடு நின்மலா நின்னருளை
யெனறுபெறு வேன்றீய னேன். (எசு)

ஏனக்கொம பென்று மிலங்கு மணிமார்பா
கூனற் பிறைவேணிக் கோமானே - கானத்
துறைவேடா கோமா னுனக்குமின் சொலலோ
நிறைமன்றத் தாயென்சொ னிறகு. (எஎ)

றைமருவு கண்டத்தன் காமர்நதி யோடு
றைமருவு செவ்வேணிப் பெம்மான் - நறைமருவு
சோலைசூழ் தென்றில்லைத் தொன்னகரான் வெள்ளென்பு
மாலையா னீவன் வரம். (அகூ)

வரமேய்ந்த தென்றில்லை மன்னுமண் ணுண்ட
ரமேய்ந்த செங்கைத் தலைவா - புரமேய்ந்த
வாய நெருப்பிற்கு நேராகி நீறாகாதோ
வாய பவமா மெயில். (கூ0)

எயில்சூழ்ந்த தென்றில்லை யீசா விமய
பிலசூழ்ந்த வாமத்து வள்ளா - லயிலசூழ்ந்த
சூலப டையாய்நின் றுலடிசூழ்சொல லென்னையன
பப டைப்பாணு மற்று. (கூக)

மற்றும பெறுமடயனென் வன்னெஞ்சே பூஞ்சோலை
றுநெ தென றிலலைச் சுடாமன்றி - லுற்று
டாடு மெம்பெருமா னற்குஞ் சிதந்தா
மாரா சேவை செயின். (கூஉ)

செயயில் வளமுரலுந் தென்றில்லைத் தொன்னகரோ
மயில் கைலாய மாமலையோ - பொயயில்லா
வேதமுத யோதியேன் வெயயவுள மோபரம
னேதமின்றி வாழு மிடம். (கூ௩)

இடதது மான கொண்ட விறைவா வுதிசி
வ - நதுசிழன் மேய மருங்கே - தடததுக

சயம்பாயுந் தில்லைச் சருத்தா வுளத்து
மயலபாயா வண்ணமருள் வை. (சஎ)

வையம் பரவ வளரு மணிமன்றி
லையன் கழனிறுவி யானந்தரு - செயயும
திருககூத்தை முன்னின்று சேவிககு மெய்யடன
பருக்கூத்தை மெய்யில்லை பார. (சஅ)

பாரிடங்கள சூழப படர்வனத்தி னின்றாடு
நீரிடங்கொள் செஞ்சடில நின்மலனை - சோரிடமகொள
வாமத்தாள் காண மணிமன்று நினறாடு
மேமத்தா சேத்த வினைந்து. (சகூ)

இயம்பப் புகின்மன்றத் தெமமான் பெருமை
நயம்படச் சொல்ல னலமே யியம்பும்
புல்லோர பெருமை புகலுங் கனவிடத்தும
சொலலோஞ்சொல லோமே துணிந்து. (ருo)

துணிந்தமறை யாகமங்கள் சொல்லபோன வேணி
யணிந்த வரவ மசையத் - திணிந்தவொளி
மன்றாடு மானந்த வாரமுதை யுண்டுவக்குங்
கன்றாடுங் கையுமையாள் கண். (ருக)

கண்மணியே முக்கட் கரும்பே யிருளகற்றும்
விண்மணியே யென்றன்பர் மேவவே - பெண்மணியாம
பாகத்தாள் காணப் பரமன் மணிப்புயப்பூ
ணாகத்தான் செய்யு நடம. (ருஉ)

நடலை யறுத்தோ நமற்கஞ்சோம் பாசக்
கடலை யெளிதிற் கடந்தோம் - திடவன்பு
பெற்றம் பலமடைந்தோம் பேணுவோ மெம்பெருமான்
சிற்றம் பலம்வணங்குஞ் சீர். (௪௦௦)



திருச்சிற்றம்பலம்.

## சிறப்புப்பாயிரம்.



பன்பாவந் தாதிநாட் பண்ணவனைப் போற்றியொரு
வெண்பாவந் தாதி விளம்பினான் - விண்பானன்
கோடிந்தி யாகரா வுத்தமவென் றேத்தாசைச
சாடிந்தி யாகரா சன்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெள்ளியகொக் கிறகறுகு மதிநதிநீ
றரவாதி மிலைந்து வந்தே
யொள்ளியபூந் திருக்கைலை வீற்றிருக்கு
நடராசற் குவப்புச் செயவ
துள்ளியவீ தென்றறிஞர் சொலவெண்பா
வந்தாதி யொன்று பன்னூ
றெள்ளியசீர்த் தியாகரா சக்கவிஞ
ரேறினிது செப்பி னானல்.

## திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி
முற்றிற்று.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி.

## காப்பு.

திங்களணி செஞ்சடைமா தேவன்வெண்பா வந்தாதி
மங்கள மாக வழுத்தவின்சொ - லிங்கருளு
மாதங்க வத்திரத்து மான்முதலோர்க ளேற்றுமுக
மாதங்க வத்திரத்து மான்.

## சமயாசாரியர்.

அடிகளார், காழிவாய் ஞானக் கவுணியாரூ ரர்மணியு
மாழிவாய்க் கன்மிதந்த வப்பனு - மேழிசைவாய
பாட்டுரைத்துக் கண்பெற்ற பாவலனுங் கோவையரு
ளேட்டெழுதச் சொற்றவனு மே.

## அவையடக்கம்.

சீரூருஞ் செல்வத் திருக்கோயில் கொண்டருளி
யாரூரு மொற்றியு மாபரன்றன் - பேரூரென
பாடற்குற் றஞ்சிறிதும் பாராதருள்புரிவா
னூடற் குலக மயர்ந்து.

## நூல்.

திருவார் கமலைத் தியாகேசா வொப்பி
லொருவா வென்கண்ணே யொழிப்பாய் - கருவாய
பிணிகருமருந் தென்றுன்னைப் பேசலன்றி யென்கண்
மணிகருமருந் தென்பேன் மகிழ்ந்து. (க)

மகிழ்ந்தொற்றி யூரவாழும் வள்ளால்முக கண்ணு
நெகிழ்ந்துள்ள நின்னை நினைப்பேன் - புகழ்ந்துகவி
பாடுவனென் கண்மறைவைப் பாறறினனென் றென்றுங்கொண்
டாடுவனென் னையா வருள். (உ)

அருளுடையே னென்றென் றறைவையறி வில்லா
மருளுடையேன் கண்ணை மறைத்த - லருளோ
திருவாரூர் வாழுஞ் சிவனே வாய்வாழ
மருவாரூர் மாய்த்தாய் வழுத்து. (ங)

வழுத்துவே னொற்றிநகர் வாழ்வேநின் றுணைஞ்
சழுத்துவே னென்று மயனோன் - கொழுத்தபுக
ழையா வரனே யடியேன் குழிவிழுந்து
நையாத வண்ண நவில். (ச)

நவில வினிக்கும்பன் னுமைத்தாய் கற்ற
கவிவலவ ரோத்துகறைக கண்டா - புவியரசா

மாரு ரரசே யமுதே யடலாழித்
தேரூர் விடங்கவருள் செய். (ரு)

செய்ய கழலடியேன் சென்னிமிசை வைத்தருள்வாய
வெய்யவிட முண்ட விமலனே - கைய
ரடையாத வொற்றிநக ராண்டவனே சூலப்
படையாா மலர்ககரத்தப் பா. (கா)

பாவா லுனையன்பிற் பாடேன் பரமேட்டி
பூவாலுன் பொறபாதம் பூசியே - னேவால
வருந்துமெளி யேனுய் வகையுண்டோ செலவந
திருந்துங் கமலையர சே. (எ)

சேவேறி வந்தடியேன் செல்லல்களை வாயமாலும
பூவேறி னானும் புகழ்புனிதா - காவேறிக
கார்தூங்கு மொற்றிநகா காபாலீ கங்காளா
நீர்தூங்கு செஞ்சடைய னே. (அ)

நேசஞ் சிறிதுமிலே னின்னடிமை யென்றுரைபபேன
பாச மகன்றெப் படியுய்வேன - ஈசா
கமலா லயத்தமர்வாய் காராா களத்து
விமலாநா யேற்கு விளம்பு. (கூ)

விள்ளு பெரும்பிறவி வேலைக் கொருவடவை
யெள்ளுவினைக் காட்டிற் கிருநவியங் - தெள்ளுபுனல்
பாய்சடையா னொற்றியூர்ப் பாண்டரங்கன் வானமர
ராய்புகழான் செம்பொ னடி. (௧0)

அடியடைந்தார் துன்பத் தழுந்த லழகோ
கடியரவக் கிண்கிணிப்பொற் காலா - முடியின்மதி
வைத்தாய் கமலை வரதா வடாதிமலை
முத்தாவுய் மாறக்க மொழி. (கக)

மொழியத் தெவிட்டா முதல்வாநா யென்றுன்
பொழியக் கருணை யுதவாய் - கழியப்
புகழ்வே னுனையொற்றிப் புண்ணியா வின்றே
லிகழ்வே னிரந்துண்டா யென்று. (கஉ)

என்றுமதிக் கண்ணு வெழிற்கமலை யீசாமான்
கன்று சுமந்த கரதலத்தா - யென்றுனையே
பேசப் பெறுவேனேற் பெற்றேன் பிறவிமுதல்
வீசப் பெருவான் விரைந்து. (கங)

விரையார் மலரிதழி வேய்ந்த விமலா
நரையார் விடைபேறு நம்பா - வரையா
ரரவணிந்த வொற்றியூ ரண்ணலே நெஞ்சிற்
கரவணிந்த நாயேனைக் கா. (கச)

காம னுடல்பொடித்தாய் காலன் படவுதைத்தாய்
பூமன் சிரங்கொய்தாய் பூங்கொன்றைத் - தாமனே
சூல மழுவேன் சுமந்தாய் கனற்கண்சேர்
பால கமலைப் பரா. (கரு)

பரனென்று மொற்றியூர்ப் பண்ணவனென் றுஞ்சங்
கரனென்றுங் காளகண்ட னென்றும் - வரனென்றுங்

கூறு மடியவனைக் கூற்றஞ்சும் பிட்டகல்வா
னேறும் பகடோ டிரந்து. (க௬)

இரப்பார் பசியா லினைவா ரெனையார்
புரப்பா ரெனவே புகல்வார் - சிரப்பாற்
சிரமேந்து தென்கமலைத் தேவே சனைமுன்
வரமேந்த வாழ்த்தாத வர். (கஎ)

வரைமகள்வா மத்தான் மணித்திரளை வாரித்
திரையெறியு மொற்றியூர்ச் செல்வன் - பிரசமலர்க
காமற் பொடித்த கனல்விழியான் பூங்கொன்றைத்
தாமன்பொற் றுளே சரண். (கஅ)

சரணஞ் சரணமென்று சார்ந்தாலா ரூரா
வரணம் பொடித்தநகை யப்பன் - முரணு
ருழுவை யதளுடையா னெங்கருளா னெஞ்சே
நழுவவிடு வானோ நமை. (க௯)

நமரங்கா ளொற்றியூர் நம்பனையே சேர்மின்
பமரஞ் செறிபூப் பறிமி - னிமிரவன்றாள்
சூட்டுமினன் னேன்புகழ்ந் தோதுமின் றன்பொழிய
வோட்டுமின் பேரின்ப முற்று. (உ0)

உற்ரு ருனையன்றி யுண்டோ வடியேற்குப்
பெற்ருரு நீயே பெருமானே - கற்ருர்கள்
பாப்பாடு மாரூர்ப் பரமேசா நோயொழித்துக்
காப்பார்கள் யாரோ கனை. (உக)

கறைக்கண்டா நின்னையொரு காலு மறவேன்
பிறைக்கண்டஞ் சூடும் பிரானே - சிறைகலுழ
னூர்ந்தான் றொழுமொற்றி யூரா யருளுன்னைச்
சேர்ந்தார் தெளியும்வகை தேர்ந்து. (உஉ

தேரார் நெடுவீதிச் செல்வந் திருவாரூ
நீரார் சடில நிமலனே - காராருங்
கண்டநின் னன்பர்களைக் காலன் கரத்தேந்து
தண்டஞ் செயலென்னோ சாற்று. (உ௩

சாற்றுதிரு நீறணிந்து தண்கண் மணிபூண்டு
போற்றுதிரு நாமம் புகன்றேத்தி - யேற்று
வருவாரேதன் னொற்றியூர் வாழ்வார்கா ளானார்
மருவார் கருவினிடை வந்து. (உ௪

வந்திக்கச் சென்னியுண்டு வாழ்த்திடநன் னாவுண்டு
சிந்திக்க நீயுண்டு செஞ்சடையே - லந்திப்
பிறையணிந்த தென்கமலைப் பெம்மான்றா னுண்டு
குறையுண்டோ நன்னெஞ்சே கூறு. (உ௫

கூறுதமி ழொற்றியூர்க் கோமானுக் கென்செய்தோ
மேறு விடைமே லெழுந்தருளி - நாறுகுழ
லம்மையொடு காட்சி யளித்தருளி நன்னெஞ்சே
நம்மைப் புரந்தருள நாம். (உகூ

நாமா தவமுடையோ நன்னெஞ்சே தென்கமலைக்
கோமா னெதிர்நின்று கும்பிடோம் - பூமாலை

சூடோ மினியகவி சொலமித் துநியோங்கூந
தாடோஞ் சிறிதுமித ஞல. (உஎ)

ஆல மிடற்றி லணிந்துமலா மாதாககு
நீலஞ் செவியி னிறுத்திஞய் - கோல
மருப்பணிந்த வொறறியூா வள்ளா லுனது
திருப்புகழுக கீறுண்டோ செபபு. (உஅ)

செப்புங் கமலந நியாகேசா வென்றுநீ
யொப்பு முயர்வு மொருவிஞ - யப்பனே
யுன்னைவிட வென்னே யொழிந்தருள்வாா யாசேயை
யன்னைவிட லன்றே யழகு. (உகூ)

அழுநபிள்ளை பாலருந்து மென்பா ரழுது
மிழுதையேன் மாட்டிரக்க மின்றே - தொழுதகைய
வெட்டுவா ரில்லையொற்றி மேவுபர மாவிதழிக
கட்டுவா வேணியழ கா. (ஙூ0)

காவேநது பொன்னகரங் கைவிட்டுத் தென்ஞரூாப
பூவேநது பூங்கோயில புககமாந்தாய் - சேவேநது
பபடனே யென்னே யகற்றிற் பழியுண்டோ
துபபைகோ வேணியாய் சொல். (ஙூக)

சொலவேன்கே ணேயெமின் றூவாயின் மண்ணிட்டு
வெல்வே னெனேநீ விடுத்தகலவா - யலவாய்
களத்தனெற்றி யூராளி காமறகாய்ந் தானென
னுளத்த னருள்வலிகொண் டோாந்து. (ஙூஉ)

ஓராரு நின்புகழை யோர்ந்துன்றா டஞ்சமெனச்
சேராரு மின்கவிகள் செப்பாருஞ் - சீரே
திருந்துங் கமலைத் தியாகேசா மண்ணரி
விருந்தென் னிறந்தென் னியம்பு. (௰௩)

இயங்கலிக்கு மொற்றியூ ரெந்தாய்நின் னன்பர்
நயங்கலிக்கும் பாட னவிலேன் - பயங்கலிக்கு
நெஞ்சேன் கொடுநோயை நீக்கியடி யேன்முன்னின்
றஞ்சேலென் னீயே யரண். (௰௪)

அரணம் பொடித்த வழகாநா யேற்கு
மரணம் பிறப்பிரண்டு மாற்றிச் - சரணந்
தருவாயே லாரூர்த்தி யாகேச னென்பே
னொருவாது நிற்கே யுறும். (௰௫)

உற்ற நிராமயனென் றோதற்கேற் பச்சிறியேன்
பெற்ற பிணிவருத்தம் பேசினேன் - முற்றுணர்ந்து
நீயறியா யொற்றியூர் நின்மலா நீயறிவி
ஞேயறியே னன்றோ நுவல். (௰௬)

நுவலடியார் துன்பொழியா நோன்புமுனக் குண்டோ
கவலடியேன் றுன்பங் களையாய் - சுவலினிடைக
கங்காளா தென்கமலைக் காமாரி வெற்புயிர்த்தாள்
பங்காளா வென்னே பகர். (௰௭)

பகலவன் கண்ணைப் பறித்தாய் மகத்தி
லிகலிலேன் கண்மறைத்தா யென்னே - பகையு

முறவுமிலா னென்ப துணர்த்தவோ வொற்றி
யுறவினை-யாய் நாபேற் கறை. (௩௯)

அறையு மறையு மரிய ுமயனு
நிறையுஞ் சுரருமெதிர் நின்று - பறையுந்
துதியோநின் பூஞ்செவிக்குத தொலவளஞ்சே ராரூர
பதியோநா யேன்புகலும் பாட்டு. (௩௯)

பாடும் பணியோடுநின் பாதப் பணியடியேன்
கூடும் பொருட்டடிமை கொண்டருளவாய - சூடும
பிறையோய் திருவொற்றிப் பெம்மானே யாரகரு
மிறையோ யிரங்குற் றினிது. (௪௦)

இனிய பசுந்தேனு மின்னமுதும பாலுங்
கனிரசமும் பாகுங் கலந்து - நனிநின
செவிககருத்த நாவலூரச் செம்மலோ வாரூரப்
புவிககரசே நாயேன் புகல. (௪௧)

புகலெனககு நீயன்றிப் புண்ணியா வுண்டே-
னகவெடுத்து நம்பா நவிலவாய் - ககனந்
தடவுபொழி லொற்றியூரச் சங்கரா நாயே
னிடரொழித்துக் காப்பா யினி. (௪௨)

இனியடியே னென்செய்வேன் யாரை யிரபபேன்
பனிமதியஞ் சூடும் பரமா - துனியகதா
வேலோனைப் பெற்ற விமலாவா ரூருடையார்
பாலோ யெனதிடுக்கண் பார். (௪௩)

பாரளந்த மாயவனும் பங்கயத்து மேயவனு
நீரளந்த செய்யசடை நின்மலா - காரளந்த
கண்டாவென் றேத்துங் கபாலியொற்றி யூரவருட்
பண்டார மேகண்ணேப் பாற்று. (சச)

பாவலருங் காவலரும் பண்ணவரு மண்ணவரு
மூவலாகொண் டாடு மிருந்தப போற்றியே - நாவலருஞ்
சீருவாகரும் நெனகமலத் தெய்வமே யுண்டோநின
பேருவாகத் தொப பணி (சரு)

பிணியென் செயுநெஞ்சே பேதுறே லொற்றி
மணிகண்டன் பாத மலராக - கணிகொண்டு
பூசித்து நின்று புனைந்தேத்தி யென்றுநான்று
நேசித்தோ வாம லினே. (சகூ)

நினைவாயென் றொன்றுமெறா நின்றுகவி மாலே
புனேவாயென் முருகப் புனித - னெனையடிமை
கொண்டா னினியென் குறைநெஞ்ச மேபனையன
வண்டார மலர்கழலே வாழ்த்து. (சஎ)

வாழ்த்துவது நின்புகழை மன்னுநின்று னிற்சென்னி
தாழ்த்துவது நின்னைமனஞ் சாத்துவதுஞ் - சூழ்ந்தபொழில்
செற்றவொற்றி யூர்வாழுஞ் செல்வத் தியாகேசா
முற்றவமி லாகளிதா மோ. (சஅ)

மோதகக்கை யாற்பெற்ற முன்னவா நாயேன்செய்
பாதக முற்றுமழுற் பஞ்சன்றோ - கோதகனின்

னன்பர்களை யாரூர்த்தே வாசிரியன் காவணத்துந்
துன்பகலக கண்டு தொழுின். (௪௯)

தொழுவா ரெழுவார் துதிப்பார் மதிப்பா
ரழுவாரகூத் தாடுவா ராகி - வழுவாகின்
றெுண்டரடித தொண்டுசெயுங் தூப்பே றெனக்கொற்றி
யண்டாபிரா னேயருள்செய் யாய். (௫0)

ஆபாச் சிறியேனு மாய்ந்தபெரி யோருறும்பே
றேயா மகிழ்கினை யெய்தினேன் - றாயா
மதியு மரவுமுடி வைத்தாயா ரூர்வாய்
நிதியே யதனை நினைத்து. (௫௧)

நின்னைத் துதித்திடுவே னின்வாமத் தேய்ந்தமலைப்
பொன்னைத் துதிததுப் புகழுவே - னுன்னருமை
மக்களையு நன்கு வழுத்துவே னொளொற்றி
யககரவம் பூண்டருளை யா. (௫௨)

ஆவா வடியே னலந்தே னணியாரூர்த்
தேவா தியாகச் செழுஞ்சுடரோ - னோவாலே
யெத்தனைநா ளல்லற்பட் டேங்குவே னெம்பெருமான்
சித்தமிரங் காயென் செயல். (௫௩)

செயலொன்று மின்று திருவொற்றி யூர்வாழ்
புயலொன்று வேணிப் புனிதா - பயலொன்று
வெற்பரசி யோடு மிளிர்காட்சி தந்தருடொங்
கற்பனையான் பாகாய கா. (௫௪)

காட்டுங் கதிரவனீ காணுங்கண் ணாயேனென்
மாட்டு விளங்கொளிநீ மாற்றினாற் - காட்டுதிற
மெங்கு விளக்குவா யீசாதென் னாரூரிற்
றங்கு முலகநா தா. (௫௫)

தாதாநீ யேநின்பாற் சார்ந்திரப்போன் யானுவந்து
நீதாவென் றேனென்னை நீக்கினா - லோதுகொடை
மற்றெங்குக் காட்டுவாய் மாதேவா வொற்றியூ
ருற்றபர மாபுகலே தோ. (௫௬)

ஓவென் றலறி யொளியடியேன் கண்ணிற்குத்
தாவென்றே னீதிரத்த முனன்றோ - வேவினா
னென்றுசினந் தோன்றுமையா யோப்பரவை யாமனைக்கேன்
சென்றாய் கமலையமு தே. (௫௭)

தேவர்பர வொற்றியூர்ச் செல்வாநின் செஞ்செவிக்கண்
மூவர்தமி ழோடியான் மொழிபுன்சொற் - பாவும்
புகுமேயா ழோசையொடு புன்மா னொலியு
நகுமே யதனு ணயந்து (௫௮)

நயந்துகே ளாயே னவிலொருவின் ணப்பம்
பயந்தவிர நின்பேர் பரித்தேன் - வயங்காரூ
ரெந்தாயான் கண்ணிழந்தே னென்றாலி யாவர்க்குந்
தந்தாய்நீ கண்ணிழந்தாய் தான். (௫௯)

தானக் களிற்றின் றலைமே லுலாப்போதும்
வானத் திறைபிரமன் மால்வாழ்வு - மேனத்தின்

கோடணிந்த வொற்றியூர்க் கோமானின் றொண்டுசெயும்
பாடணிந்த வாழ்விற்கொப் பா (௩௦)

பாடக்கண் பாவலர்க்குப் பண்டுதந்தா யின்றுன்னை
நாடக்கண் ணுயேற்கு நன்குதவி- னீடுன்
புகழ்புதிதா மாரூரப் புனிதா வஃதன்றி
யிகழ்பவரோ யாரு மிலர். (௩௧)

இல்லை யெனவிரந்தாக் கீயாமை புண்ணியமோ
கொல்லைவிடை யூருமெ குழகனே - நல்லை
யெனவுரைப்பார் நிறகின்றோ வீசனே யொற்றிய
பனவனே யீதுதுவகரும் பண்பு. (௩௨)

பண்புடையெந் தாய்நாவற் பாவலறகுத் தோழமைகொ
ணண்புடையா னென்றுவிழி நலகினுப் - நண்புடையே
னல்லே னெனினு மடிமையா னூரர்வாழ்
நல்லா யெனகரும்விழி நலகு. (௩௩)

நல்குரவென் றொன்று நணுகாது நால்வர்க்குச்
சொல்குரவு பூண்ட சுடாமதியான - பல்குரவு
பாவைதரு மொற்றிப் பரமன் புகழ்பாடு
நாவையுடை யார்பா னயந்து. (௩௪)

நயனங் களிக்க நடனஞ்செய் நாதா
பயனங்கை வைத்த பரமா - வியனஞ்ச
முண்டவா ரூரா வுறுநோ யொழித்தென்னைக்
கண்டுகொள ளிற்கே கடன் (௩௫)

கடனஞ் சமுதாக்கக கற்றாய் தமியே
னுடனஞ் சனமோ பொழிகக - விடையோனே
கல்லா யெனிலென் களைவாய்தென் னொற்றிவாழ்
மல்லாயெல் லாம்வலல வா. (௬௬)

வாயே யுனககிதன்மேல் வாழ்வென்றெல் னாரூர்வாழ்
தாயே யனைத்துயிர்க்குந் தந்தையே - நாயேனைக்
காட்பாய் கருணைக் கடலேயென் றின்றமிழாற
பாப்பாடிற் போமே படா. (௬௭)

படவரவந் தோடுபுலிப் பாதனுங்கண் டேத்த
நடவரவங் காட்டுகழ னம்பன் - றடமதிலசூ
ழொற்றியூர மேவு மொருவற பணிந்தேத்தும
பற்றாளாக குண்டோ பயம். (௬௮)

பயன்மதியஞ் சென்னி பரித்தாயவெற் பீன்ற
கயலவிழியோர் பாகங் கலந்தாய் - வியனாரூரக
கம்பிககா தாகருணைக் கட்டியே நாயேனை
நம்பிககா தாநன் னலம். (௬௯)

நலமொன் றுனக்குரைப்பே னன்னெஞ்சே கேட்டி
பிலமொன் றரவணிந்த பெம்மான் - கலமொன்று
வாரிசூ ழொற்றியூர் வாழ்வான் பெருங்கருணை
நாரிபா கன்கழலே நம்பு (௭௦)

நம்பினே னுன்னை நழுவவிடேல் வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே - தும்பிக்

கரத்தோனே யானுமொரு காண்முளைமண் ணுண்ட
சரத்தோ யருள்கமலே சா. (௭௧)

சாரந்தோர்ப் புரக்குந் தயாநிதிநீ யேயெனமுற்
றோர்ந்தோர் சொலல்கேட் டுனையடைந்தேன் - வார்ந்தமலைச்
சாபாதென் ஞெற்றினா தாகாமுன் கூடலிலே
மாபாவி யைப்புரந்த வா. (௭௨)

வாழ்வுனக்கீ சன்புகழை வாழ்த்தலே வன்னெஞ்சே
தாழ்வுனக்கன் ஞேன்புகழைச் சாற்றுமை - யேழ்புவியும்
போற்றுங் கமலைப் புராணனைவாய் வந்தபடி
சாற்றுறுதி யீதுனக்குத் தான். (௭௩)

தானே தனக்குச் சரியாநின் றண்மலர்க்கீ
யானே சரண மடைந்தடிமை - யானே
னினியென் செயினுஞ்செ யெம்பெருமா னின்பங்
கனியொற்றி யூர்ச்சங் கரா. (௭௪)

கராவாய் மதலைவரக் கண்டாய்தென் ஞரூர்ப்
பிரானேயாற் றிட்டசெழும் பீதம் - பராவக
குளத்துவரச் செயதாய் கொடியேன்கண் டந்தால்
வளத்தவையோ டொன்றுமம் மா. (௭௫)

மாதேவா வொற்றியூர் வள்ளா லடியார்செய்
கோதே கொளாதகுணக் குன்றமே - சூதேய்
முலையா ளமர்பாகா முன்னவா நீயே
னுலையா தருளை யுதவு. (௭௬)

உதரஞ் சுமந்த வுலகளந்தோன் மார்பத
ந்தரஞ் சிவந்தா ளகலாக் - குதர
நிகாமா ளிகையாரூர் நின்மலா வென்று
பகாவாதுன் போடும் பறந்து. (௭௭)

பறவையூர் தேவர் பரவும் புனிதா
நறவையார் கொன்றையணி நாதா - வுறவை
யடையாா புரஞ்செற்ற வண்ணலென் றொற்றி
யுடையா யெனையா ளுவந்து. (௭அ)

உவந்தால முண்டமர ரூர்புரந்த நம்பா
தவந்தானுஞ் சற்றேனுஞ் சாரேன் - சிவந்தால
மனையமன ரேன்றி லறியேனு ரூரரசே
உனையனறி வேறுதுணை யொன்று. (௭௯)

ஒன்றுபுகல் வேனன் றுணாநெஞ்சே நீயுனக்கு
நன்று புரிதற்கு நாடினல - வன்றிறன்மா
லேறுடையா னொற்றியூ ரெமமான்றன் சென்னிமிசை
யாறுடையான் சீரையே யாய். (அ0)

ஆடரவக் கிண்கிணிக்கா லையா பிறையோடு
சூடரவச் செஞ்சடையாய் தொண்டாசீா - பாடரவ
மோவாத திருவாரூ ருத்தமா நாயேனைக
காவாமை நன்றோ கழறு. (அக)

கழல்பணியக் கல்லாா கருதுபுகழ் சொல்லார்
விழலுக கிறைத்தே விளிவாா - குழன்மொழியாள

வாமத்தான் றிங்கள் வளர்சடையான் பொன்னிதழித்
தாமத்தா னெற்றிநகர் சார்ந்து. (அ௨)

துன்பமெலா நீத்தோரு சுடுநோ யறத்துறந்தோ
ரின்பமெலா மெய்த வினிந்தடையெ - னன்ப
ருளத்தான்றென் னூருர்வா ழும்பர்பிரா னஞ்சார்
களத்தான் புகழ்நாக் கலந்து. (அ௩)

கரத்தி லபய வரதங் கலந்தாய்
சிரத்திற் சிரமாலை சேர்த்தாய் - வரத்தை
யருளாயஞ் சேலென் றடியேனுக் கென்னே
தெருளாளா வொற்றியர சே. (அ௪)

சேலேந்தி னான்றியத் தீத்த பழிதீர
வேலேந்தி னானை விதித்தவழற - பாலவிழிப்
பித்தன் கமலைப் பிரானெதனாற் றீர்ப்பானோ
பத்தற் கருளாப் பழி. (அ௫)

பழியஞ்சி யென்றொருபேர் பண்டுகொண்டா யன்டர்
வழியஞ்சி யஞ்சிககால் வைத்துக - குழியஞ்சி
யாழப் புரிந்துபழிக் கஞ்சா னெனும்பழியின்
மூழ்கலொற்றி யாய்முறையா மோ. (அ௬)

மோலிமுடி சூடி முறைநிறுவி யரசாய்
நீலி யிடத்துவைத்த நின்மலா - சூலி
திருமுன் முறையிடுன் செஞ்செவியே லாமை
தருமமோ வாரூரத் தா. (அ௭)

தாங்குமிமி லேறுச் சரமாத் துவசமா
வீங்கு முலைமனையா வெம்பணியிற் - றாங்கு
மொருவனைக்கொ ளொற்றி யுடையாய்நா யேனை
மருவ டிமை யாககொள்ளு வாய். (அஅ)

வாரார் கயிலை மலையோ மறைமுனியோ
வேராரூங் கோயிலோ வெள்ளுளமோ - சீராரூரத்
தம்பிரான் கங்கைச் சடைமுன்பூங் கொன்றையணி
பெம்பிரான் வாழு மிடம். (அகூ)

இடங்காவல் பூண்டாருக் கெந்தாய்நின் சென்னி
மடமகாத காதலொழி வைகும் - தடங்கொங்கை
மின்னேயரு செல்வேன் விளங்கொற்றி யூரம்பா
பின்னே தெளிக்கருள்வாய் பேசு. (கூ0)

பேசேனி மன்றிப் பிறதெய்வ முண்டென்று
கூசேனினையென்றுங் கும்பிடுவே - னேசேன்
பலியேற்று யென்றுரூர்ப பண்ணவா நோயா
னலிவோட் டுவதெந்த நாள். (கூக)

நாளே வினையே நமனே நவக்கோளே
கோளே புரியவெனைக கூடனமின் - றுளே
யெனக் களித்தா ரொற்றியூ ரெம்பிரா னென்புன்
மனகசுளிருப் பானென்றும வநது. (கூ௨)

வநதேன் றிருமுன் மகிழ்ந்துபணிந் தேனமுதே
செந்தேனே கறகண்டே சீனியே - சொர்தேனைக

காவென்றே ளுருர்முக கண்ணு வருளாது
போவென்று லன்றே புகழ். (௩௩)

புகழ்ச்சிவிருப பில்லா புவனத்தில் யாரே
யிகழ்ச்சிவிருப் புள்ளா ரெவரோ - புகழ்ச்சி
விருமபினையே லெற்கா விமலாதென் னொற்றிக
கருமபினையோ சொலலாள்பா கா. (௩௪)

பாகங் கலந்தமலைப் பாவைபாய பாவைமா
மோகங் கலந்தமுழு மூடனேனை - நேகங்
கலந்தபிணி நின்னருண்முன் காண்முன்றுய யன்றே
நலந்தழையு மாருரண் ணு. (௩௫)

அண்ணுதென் னொற்றியூ ராண்டவா செந்தமிழ்பா
பண்ணு கவிபாடிப் பாவலாக - ணண்ணு
விரககிலெநா பேசாதொன் றீயா திருந்தா
புரகருட்வள்ளற் கிதொருபண் பே (௩௬)

போதன் பணிபாதன் புண்ணியன் றெனகமலை
நாதன் றிருநாவ லுவலாகருத் - தூதன
கலங்குமெளி பேற்கருளாக காரணமென் னமேதோ
துலங்கு மருளைச் சுமந்து. (௩௭)

சுமந்தா யருளைச் சுடுநோய் தொலைக்காய
கமந்தா னிதுவோ கழறுய் - நமன்று
னுருளவுதைத தாயொற்றி யூரா யுலக
மருளவதெங் குக்கொட்டு வாய. (௩௮)

வாயாரப் பாடி மனநெகிழச் சிந்தித்து
நோயாலந் தோவின்னு நோவேனோ - தீயாரைப்
பாடிப் பரிசுபெறும் பாவியோ யான்மன்றத்
தாடிமகி ழுங்கமலை யாய். (சகசு)

ஆய்ந்தவன்பர் கூடிக்கூத் தாடிப்பே ரானந்தந்
தோய்ந்துமகி ழொற்றியூர்த் தொன்னகரில் - வாய்ந்தபர
ஞானந்தபுகழ் பாடு மறிஞரில்லந் தோறுமென்றுஞ்
சேர்ந்து மகிழுந் திரு. (க00)

திருச்சிற்றம்பலம்.

---

## சிறப்புப்பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருக்கமலை யொடுமொற்றித் திருநகர்வா
  ழருட்செல்வத் தியாகே சன்றேண்
டருக்கமலை யிரந்தளித்தோ னருங்கமலை
  யணிவேணி யண்ணன் மீதே
இருக்கமலைச் சிரகிரிவாழ் தியாகரா
  சக்கவிஞ னெம்ம னோர்தம்
வருக்கமலை வறவன்பின் முதற்பாவந்
  தாதியொன்று வகுத்தான் மன்னோ.

ஆரூரி னெடுமொற்றித் திருநகரிற்
புற்றிடங்கொண் டமர்ந்தே யாழித்
தேரூருந் தியாகேச னிருந்தாடுஞ்
செயற்கேதுந் தெரியி னிந்த
வேருரும் புகழ்த்தியாக ராசனா
வலனன்பி னியம்பு செப்பற்
சீருருமிவ் வறுதியை முனமறிந்த
மகிழ்வென்று செப்ப லாமால.



## திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி.

முற்றிற்று.



கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர் மருந்து வெண்பாமாலை



## காப்பு.

சீர்பூத்த வாரூர்த் தியாகேச னைத்துதிக்க
நார்பூத்த வின்சொ லனியருளு - மேர்பூத்த
வைங்கரநால் வாய்முக்கண் ணன்றருளி யம்பரரு
மங்களஞ்செய் தெய்வ மருந்து.

## சமயாசாரியர்.

தீப்பிணி தீர்க்குஞ் சிரபுரத்து வாழ்மருந்து
வாயரசென் னும்பேர்கொண் மாமருந்து - பாயவிழி
மாசகலப் பாடுநா வன்மருந்து மாணிக்க
வாசகப்பேர் பூண்ட மருந்து.



## நூல்.



திங்களணி வேணித் தியாகேச னென்னும்பேர்
தங்கப் புனைந்த தனிமருந்து - துங்கத்
திருவந் தருமருந்து செய்யமறைச் சென்னி
மருவுமருந் தாரூர் மருந்து.

கொன்றை யணிந்த குணமருந்தன் பர்க்கென்று
நன்று மகிழ்ந்துபுரி நன்மருந்து - குன்றாத
காட்சியடி யேற்கருளுங் கண்மருந்து கல்வியான்
மாட்சிபெறு மாரூர் மருந்து. (௨)

மால்பிரமன் காணாத மாமருந்து தற்புகழு
நூல்பலவாய்ந் தோராபிறவி நோயமருந்து - காலற்காய்ந்
தெள்ளாத வில்லா வெழின்மருந் தேற்றவாகரு
வள்ளலா மாரூர் மருந்து. (௩)

தேவர்க் கரிய திருமருந்து தென்றமிழான்
மூவா பரவு முதன்மருந்து - காவாா
கரமருந்தென் கண்ணேப் கரகருமருந் தென்றும்
வரமருந்தா மாரூர் மருந்து. (௪)

நீறு புனைந்த நிமலமருந் தோவாது
நாறுகுழல் பால்வைத்த நன்மருந்து - வேறுதுணை
யிலலாப் பெரிய வெழின்மருந்தெல் லாஞ்செயய
வல்லதா மாரூர் மருந்து. (௫)

மாலேற்றிற் காட்சிதரு மாமருந்து செங்கையில
வேலேற்ற கான்முளையின் மெயமருந்து - காலேற்ற
சென்னியா ரேத்துந் திருமருந்தெல் லாநோய்கரும்
வன்னியா மாரூர் மருந்து. (௬)

பெண்ணையிடப் பாற்கொள் பெருமருந்து தன்வயிற்றின்
...ணைவைத்த வேற்றில் வருமருந்து - கண்ணே

யகழ்ந்தவன்பர் சணட வரு மருந்தெல் லோரு
மகிழ்ந்துகொளு மாரூா மருந்து. (எ)

ஆவணங் காட்டி யடிமை கொளுமருந்து
கோவணங்கள் ளத்திற் கொளுமருந்து - தாவாக
கதியடியாக கீந்து களிக்கு மருநது
மதிமுடித்த வாரூா மருந்து. (அ)

அன்பாதுயர் காணு வருமருந்து தாள்பணியா
வன்பர்துயர் மாற்று மருநதுபே - ரினபம
பயககுமருந் தோர்நால்வா பாடுமருந தென்னுண்
மயக்கறுதத வாரூர் மருந்து. (கூ)

வெள்ள முடித்தசடை மெய்மருநது நாயடியே
னுள்ளப்பூங் கோயி லுறைமருந்து - களள
மிருவா வுளத்தாக் கினிககுமருந் தின்னன்
மருவாத வாரூா மருந்து. (௧0)

காமனைக காய்ந்தநுதற் கண்மருந்து கூடலிலே
மாமனைய வநது வழககுரைத்த - தேமருநது
கன்னியோா பாகங் கலந்தமருந் தங்கையிலே
வன்னிவைத்த வாரூா மருந்து. (௧௧)

மான்மழு வங்கைமிசை வைத்த தனிமருநது
தேனமாபூங் கொன்றைத் திருமருந்து - கானமாநத
வேட்டுவனு ருட்டேன் மிசைந்தமருந் தென்பிறவி
வாட்டுமருந் தாரூா மருந்து. (௧௨)

சுந்தரத்து நீலங் கலந்தமருந் திண்கவிசொல்
சுந்தரர்க்குக கண்ணோப் தொலைத்தமருந் - திந்துமுடி
பார்ந்தமருந் தம்பலத்தி லாடுமருந் தோயாது
வார்ந்தபுக ழாரூர் மருந்து (கஙு)

கண்டக் கறைமருந்து கான்மலர்சேர் மாணிக்காத்
தண்டதரற் காய்ந்த தனிமருந்து - துண்டப்
பிறையணிந்த சென்னிப் பெருமருந்து தூய
மறைபுகழு மாரூர் மருந்து. (கச)

வெம்பணியிற் றுஞ்சும் விடைமருந்து மெய்யடியார்
நம்ப வருள்புரியு நன்மருந்து - கம்பக
களிறுரித்த கைமருந்து காமன்றே ராய
வளிதவழு மாரூர் மருந்து. (கரு)

அப்பர்சூடர் நோய்தீர்த் தருண்மருந்து பாண்டியன்மெய்
வெப்பொடுகூ னுந்தீர்த்த மெய்மருந்து - துப்பினையே
யொத்த சடிலமருந் தும்பர் தொழுமருந்து
மத்தமுடி யாரூர் மருந்து. (கசு)

என்னைப்பெண் ணுச்செ யெழின்மருந்து சுந்தரர்மெய்த்
துன்னைத் தவிர்த்தருளுந் தூயமருந் - தன்னை
யிழுவார் பிறப்பறுக்கு மின்மருந்திற் றேறு
மழுவார்தென் னூரூர் மருந்து. (கஎ)

விண்மணியைக் கண்ணுக்கொண் மெய்மருந்து நாயடியேன்
கண்மணிக்கு முன்னெளியைக் காட்டுமருந் - தெண்ணுமணி

கண்டனென வண்டர் களைமருந்து சோலைதொறும்
வண்டமாதென் ஞரூர் மருந்து. (௱௯)

தாமரையோன் சென்னி தடிந்தமருந் தென்பிறவி
நாமலைய வோட்டு நலமருந்து - தேமலிந்த
பூவடியென் சென்னி பொருந்துமருந் தேகம்ப
மாவடிவா ழாரூர மருந்து. (௧௯)

கண்சுமந்த நெற்றிக கவின்மருந்து வந்திக்கா
மண்சுமந்து பிட்டுண்ட மாமருந்து - பண்சுமந்த
சாமம் பரவுந் தனிமருந்து வெம்பரசி
வாமருந்தா ராரூர மருந்து. (௨௦)

பாம்பும் புலியும் பணிமருந்து பாண்டியனை
வேம்பணிய ருங்கும் வியன்மருந்து - காமனைய
தோண்மா தொருபாகந் தோயமருந்து கண்ணுப
வாண்மாத ராரூர மருந்து. (௨௧)

இந்திரன் போற்று மெழினமருந்தி ரெண்கலைசோ
சந்திரனைத் தேய்த்த தனிமருந்து - மந்திரமா
மஞ்செழுத்துள் வாருக கருண்மருந்து வாழ்பவாகள
வஞ்சமகற் றுரூர மருந்து. (௨௨)

தாரணிந்த கொன்றைச் சடைமருந்து வாமந்து
வாரணிந்த மென்முலையாள் வாழுமருந் - தேரணிந்த
வேதமுடி வைகும் வியன்மருந்து வென்றசீர்
மாதவர்வா ழாரூர மருந்து. (௨௩)

பைவைத்த பாப்புப் பணிமருந்து பாணருக்காத்
தெய்வக் கவியெழுது சீர்மருந்து - நைவன்பர்க்
கெய்தப் பொருந்தா வியன்மருந்து கந்தரத்து
மைவைத்த வாரூர் மருந்து. (உச)

வேளைப் பொடித்த விழிமருந்து வெற்பெடுத்தான்
றோளை நெரித்த சுடர்மருந்து - தாளைப்
பரவுமடி யாரதுன்பம் பாற்று மருந்து
வரமருளு மாரூர் மருந்து. (உரு)

சூலப் படைசுமந்த தொன்மருந்து பாகத்தி
லேலக் குழலியம ரின்மருந்து - கோலத்
திருப்பதத்தின் மால்விழிசோ சீமருந்து வன்றி
மருட்பணிந்த வாரூர் மருந்து (உசா)

உழுவை யுரிவைய யுடுத்த மருந்து
வழுவைபுரி போர்த்த மருந்து - கழுவிற்
கொடியனை யேற்று குணமருநது செட்தேன்
வடியிதழி யாரூா மருந்து. (உஎ)

தேமா நிழலிற் சிறந்த திருமருந்து
பூமாது போற்றும் புகழ்மருந்து - கோமான்
முசுகுந்தன் கண்ட முதல்மருந்தங் கையில்
வசுவேந்து மாரூர் மருந்து. (உஅ)

கள்ளார்ந்த வாத்திய உகாத்தமருந் தன்பாக்கு
வெள்ளானை யீந்த வியன்மருந்து - நள்ளார்.

புரமெரித்த மூரற் புகழ்மருந்தி யாரும்
வரமுகக்கு மாரூர் மருந்து. (உ௯)

கற்றோர் புகழுங் கவின்மருந்து காழியர்க்குப்
பொற்றாளந் தந்த பொருவின்மருந் - தற்றோர்க்
கிருந்தியாய்க் காக்கு மியன்மருந்து சார்ந்தோர
மருளகற்று மாரூர் மருந்து. (௩0)

சேற்கொடியன் சூரலடி சேர்மருந்து புற்பறழைப்
பாற்கடலக் கூ யுண்ணப் பணித்தமருந் - தேற்க
நுளையர்குலப் பெண்வேட்ட நோன்மருந்து கூடல்
வளையல்விற்ற வாரூர் மருந்து. (௩௧)

தேசம் புகழுந் திருமருந்து தேங்கொன்றை
வாசம் பொலிவேணி மாமருந்து - பாச
மகழ்டியா ருள்ளத் தமரு மருந் தொற்றி
மகிழடிவா ழாரூர் மருந்து. (௩௨)

மண்ணெடுவிண் கீண்டு வளர்மருந்து வான்கவிஞ
ரெண்ணுஞ்செந் நாவிருக்கு மின்மருந்து - பண்ணே
டிசைபாடித் தெவ்வோட்டு மின்பமருந் தாரு
வசைபாடா வாரூர் மருந்து. (௩௩)

சேந்தன் றவிட்டமுதுண் சீர்மருந்து பூஞ்செல்வி
காந்தனுக் காழிதந்த காமமருந் - தேந்து
கொடியில் விடைவைத்த கோமருந்து கற்போர்
மடியடையா வாரூர் மருந்து. (௩௪)

பெற்றமுவந் தேறும் பெரியமருந் தெக்கலையு
முற்றவுணர்ந் தோருணரு முன்மருந்து - நற்றவத்தோர்
சூழுமருந் தோரிரண்டு தூயசெல்வ நல்குமினனா
வாழுந்தென் னாரூர் மருந்து. (௧௫)

வேதப் பரியுகைத்த மெய்மருந்து வேகவதி
பாதமலா நாறப் படர்ந்தமருந் - தோத
வுலவாப் புகழ்மருந் துத்தமாகக்குத் தீய
மலமாற்று மாரூர் மருந்து. (௧௬)

மாயப் பகழிகொண்ட மாமருந்து வஞ்சர்புரந்
தீயக் குறுமுறுவல் செய்மருந்து - தூயகதி
நலகு மருமருந்து நாடும் பெருஞ்செலவ
மல்குந்தென் னாரூர் மருந்து. (௧௭)

கண்ணுக் கினிய கவினமருந்து காமர்மலைப
பெண்ணுக் குயிராம் பெருமருந்து - விண்ணமரர்க்
காவி யுதவுமருந் தால மயின்மருந்து
வாவிசூ ழாரூர் மருந்து. (௧௮)

வீதி விடங்கனெனு மெய்மருந்து தூதாகிப
பாதமலர் நோவப் படர்ந்தமருந் - தோதி
யுணர்ந்தா ரறிந்தமருந் தும்பரெலாம் வாழ்த்தி
வணங்குந்தென் னாரூர் மருந்து. (௧௯)

தேவி மகிழத் திருநடனஞ் செய்மருந்து
பாவியேன் கண்ணோயைப் பாற்றுமருந் - தோவி

லருளே திருமேனி யாக்கொண் மருந்து
மருளேயா வாரூர் மருந்து. (சய)

வானும் புவியும் வணங்குமருந் தன்பாக்குத்
தேனும்பா லும்போன்ற சீர்மருந்து - கூனுங்
குருடுந் தவிர்மருந்து குத்தரமான் கொங்கை
வருடுங்கை யாரூர் மருந்து. (சக)

வரத்தையடி யார்க்கருளும் வான்மருந் தங்கி
கரத்தைத் தடிமருந்து காவற் - புரத்திற்
றயித்தியரைச் சாடுந் தனிமருந்து வேளூர்
வயித்தியனு மாரூா மருந்து. (சஉ)

எய்யாப் புகழ்மருந் தேத்தித் தொழுமடியா
ரையா தருள்புரியு நன்மருந்து - வெய்ய
ரடைய வரியமருந் தற்றாக கினிய
மடையருளு மாரூா மருந்து. (சா)

இரந்தமலை வன்றொண்டர்க கிட்ட மருந்து
பரந்தமலைப் பாவைமுலைப் பாலைச் - சுரந்தன்பிற்
காழிமழ வுக்கருத்தக் கண்டமருந் தண்டரெலாம்
வாழியவென் றாரூர் மருந்து. (சச)

வீழி மிழலையிடை மேவியவா கீசருக்குங்
காழியாகோ னுக்கும்பொற் காசளித்த - பாழிமருந்
தும்ப ரமுதுணாஞ் சுண்மருந்து பூஞ்சோலை
வம்புசெறி யாரூர் மருந்து. (சரு)

மன்னுங் கயிலை மலைமருந்து வான்மதிய
மின்னுஞ் சடைமுடியில் வேய்மருந்து - முன்னுந்
தனையிரந்தோர்க கீயுந் தனிமருந தன்பா
மனையிரந்த வாரூர் மருந்து. (சகூ)

ஏடாற் றெதிரேற்று மின்மருந்து தன்னையென்று
நாடார் துயாநாடா நன்மருந்து - பீடார்
தலைவளைத்துத் தாடகைகைத் தாரகொண் மருந்து
மலைவளைத்த வாரூா மருந்து. (சஎ)

ததிவிரவு சோறு தருமருந்தப் பர்கரு
விதிமுடியைக கொய்மருந்து மேலா - நதிமுடியிற்
றுங்குமருந் தொண்கலத்திற் றுபதமின் னாபிச்சை
வாங்குமருந் தாரூா மருந்து. (சஅ)

தைப்பூச மாடத் தகுமென் றருண்மருந்து
மெய்ப்பூசு நீற்று வியன்மருந்து - கைப்போதில்
மானேந் தியமருந்து மாமதுப்பெய் பூம்பொழில்கள்
வானேந்து மாரூர் மருந்து. (சகூ)

ஓடு கவர்ந்திளமை யோரன்பர்க் கீந்தமருந்
தேடுகனல வேவா தியற்றுமருந் - தோடு
ஈரிபரியாச் செய்மருந்து நாவலாபா டுஞ்சீா
வரிபுனைந்த வாரூா மருந்து. (ருo)

கண்களிக்கும் காட்சிக் கவின்மருந்து காரிமயப்
பெண்களிக்கும் பாகப் பெருமருந்து - விண்களிக்க

வால மயின்றமருந் தம்பொன் னடியடைந்தார்
மாலகற்று மாரூர் மருந்து. (ருஎ)

இருந்தாடி யின்பெவர்க்கு மீயு மருந்து
பொருந்தாரூர சுட்ட புகழ்சேர - மருந்துமலாத்
தாட்குறி யம்பா தலைக்கருளித் தன்றலையில்
வாட்குறிகொள ளாரூா மருந்து. (ருஅ)

மண்முனிரு நான்குருவம் வாய்ந்த தனிமருந்து
கண்மூன் றுடைய கவின்மருந் - தொணமாழை
செங்கலைச செய்மருந்து தேவர் தொழுமருந்து
மஙகலிலா வாரூா மருந்து. (ருகூ)

குனறுசிலை யாககொள் குணமருந்து வேதநெடு
ஏனறுகுணி லாககொண்டோன காணும - னின்றுதழ
லோஙகலா யோங்கி யொளிருமருந் தம்மைககு
மாங்கனிநல் காரூர் மருந்து. (சு0)

பாசு பதவாளி பாாத்தற்கு நல்குமருந்
தேசலிலா ஞய ரிசைக்குநகு - மாசின்மருந்
தின்னல உ யாாக்கிசையா வின்மருந்தின் பேயுருவாய்
மன்னுமருந தாரூர் மருந்து. (சுக)

புறறிடங் கொண்ட புகழ்மருந்தென் புன்பவநீர்
வற்றிடச் செய்த வளமருந்து - கற்றுப்
புரந்த கணேமருந்து பொன்குளத்திற் கொள்ள
வரநதந்த வாரூர் மருந்து. (சுஉ)

நம்பினோ ராக்கை நழுவவிடா நன்மருந்து
வெம்பினேன் வெந்நோயை வீட்டுமருந் - தெம்பிரா
னென்னப்பூங் கோயி லிருக்குமருந் தோரைந்து
வன்னத்தென் னாரூர் மருந்து. (௫எ)

மதிசேர் சடைமருந்து வன்றொண்ட னாகருப்
பொதிசோறு தந்த புகழ்சேர் - நிதிமருந்து
நாளைப்போ வாரகாண நந்திவிலக் கும்மருந்து
வாளைச்செய் யாரூர் மருந்து. (௫அ)

புதநன் றலையிலடி வீழப புரிமருந்து
முதநடனென வேத மொழிமருந்து - சித்தனுய்க
கலலானை தின்னக கரும்பு தருமருந்து
மலலார்தென் னாரூர் மருந்து. (௫௯)

தூசொலிக்கும் கன்மோதுந் தொண்டர்தலை தாங்குமருந்
தேதசொலி கேளாச்செவிகொ ளின்பமருந் - தாசை
யுதிர்த்தமருந் தண்டங்கீண் டோங்கு மருந்து
வடுத்தவிர்ந்த வாரூர மருந்து. (௬0)

பன்றிபுவி கீண்டறியாப் பாத மலர்மருந்
தொன்றியொன்று வின்பெற் குதவுமருந் - தென்று
மழியாப புகழ்மருந் தன்பரொலாஞ் சென்னல
வழிதேற்று மாரூர் மருந்து. (௬௧)

அப்பூதி யார்சேயை யண்ணுவிடந் தீர்த்தமருந்
தொப்போ துரைநின்ற வூரப்பூச - நப்பின்றிச்

செய்தமனக் கோயில்குடி சேர்மருந்து செங்கையிலே
வையமர்சூ லாரூர் மருந்து. (சுஉ

இன்பமழ வன்புதல்வி யெய்துநோய் தீர்த்தமருந்
தன்பர் பணியா லடைந்தகொடுந் - துன்பகலப
பண்ணு மருமருந்து பாவியேன் கண்மாசு
மண்ணுமருந் தாரூர் மருந்து. (சுங)

ஈசனென வோர்மொழிப்பே ரெய்து மருமருந்து
வாசமலர்க கொன்றை வனைந்தமருந் - தாசில்
குருமருந் தின்பங் கொடுக்குமருந் தொண்சீ
மருவுமருந் தாரூர் மருந்து. (சுச)

தாயிரங்கா யென்னத் தகுமருந்து சம்பந்தர்க
காயிரஞ் செம்பொ னருண்மருந்து - நோயோ
டிருந்து வருந்துவர்முன் னெய்தியநோய் தீர்க்கு
மருந்துதிரு வாரூர் மருந்து. (சுரு)

குவிகைசிரங் கொண்டடியார் கூத்தாட முத்துச்
சிவிகை கவிகைதிருச் சின்னம் - புவிபுகழ
வாளுடைய பிள்ளையாாக கன்றருளிச் செய்மருந்தொண்
வாளுடைய வாரூர் மருந்து. (சுசு)

விற்கொண் டடித்த விசயற் கருண்மருந்து
கற்கொண்ட சாக்கியனா கண்டமருந் - தற்கொள்
களமருந்து சோழன் கவிஞரம் பூண்ட
வளமருந் தாரூர் மருந்து. (சுஎ)

சமரிற்கை தோற்றீக் கழுத்தரிகை பற்றித்
தமராய்த் தடுத்துவிட்டேற சத்த - மமர
வெழுப்பிவிடைக காட்சியன்பாக கீந்தமருந் தென்றும்
வழுத்தவிரந்த வாரூர மருந்து. (௬அ)

கறபுணையாற சொறகோன் கடலேறச் செய்மருநது
மற்புனைபூ தத்தான் மலைபோன்ற - நெற்குவைவை
வீடுமேறு கெங்குநிறை வித்தமருந தொண்சிசரி
மாடுபுனை யாரூர மருநது. (௬௯)

வீயாச் சிரகிரியின் மேயசெட்டிப் பெண்ணுக்கு
மாயாத் தயில மருந்தேந்நித் - தாயாய்வந்
தனபாய் மருத்துவஞ்செ யான்றமருந் தொண்கடலசூழ்
மன்பாரசொ லாரூர மருநது. (௭௦)

சன்றிழநத வாவிரக்கங் கண்டுதே ரூர்ந்தசேய்க
கன்றுயிர தந்தமருந் தாரூராக - கொன்று
மருச்சனைபாட் டென்ற வருமருநது சோலை
மருச்செறிதென் னாரூர மருந்து. (௭௧)

காலன்சன ருகக் கறக்கும் பசுவாகி
யேல வுலாய வெழின்மருந்து - சால
விறுகு மனத்தேற் கிரங்குமருந் தந்தேர்
மறுகுதிக ழாரூர் மருந்து. (௭௨)

கலத்திற் படைத்த கறிமீண்டு சேயாய்
நலத்தின்வரச் செய்மருந்து நந்தன் - குலத்தி

லுயர்மறையோ னுப்த்தா னூறச்செய் மருந்து
மயாவகற்று மாரூர் மருநது. (எங)

காட்டமறைக காட்டிற் கதவுதிறக் கும்மருநது
மீட்டக் கதவடைக்கு மெய்ம்மருந்து - வேட்ட
வதிபத்தா பொன்மீன்பெற் றுண்டமருந் தன்பா
வதியுற்ற வாரூர மருந்து. (எச)

பொய்யா மருந்து புனல்கூ டியமருந்து
மெய்யாக கொளியாய் மிளிமருந்து - மையா
வுளத்தாக கிருளா யொளிக்குமருந் தின்ப
வளத்தாலா ராரூா மருந்து. (எரு)

அண்டி வணங்கா வமணாகுரு டாபோடத்
தண்டியடி கட்கிருகண் டநதமருந் - துண்டிவிரா
நஞ்சமுதா னாவரசா நன்சருந்தச் செய்மருந்து
மஞ்சுதிக ழாரூா மருந்து. (எசா)

சொல்லரசை மாவேழஞ் சூழ்ந்துவணங் கிச்சமணர்க
கொலலத் திருபபு குணமருந்து - பலலவனைச்
சைவக் கரையேற்று தண்மருந்தன் பர்க்குமல
மைவிலககு மாரூா மருந்து. (எஎ)

நீறறறைவா கீசருக்கு நீர்வாவி யாயிளந்தென்
காறறு யமுத கலைமதியாய்த் - தோற்றிச்
சுகஞ்செயயச் செய்மருந்து தொன்மறையோர் கூடி
மகஞ்செய்யு மாரூர் மருந்து. (எஅ

திருக்கயிலைக் காட்சிதரி சிக்கக்கை காண்மார்
அருக்கலையச் சென்றவப்பர்க் குந்தத் - திருக்காட்சி
யையாற் றருளுமருந் தங்களத்தில வெய்யகடு
வையாற்று மாரூர் மருந்து. (எசு)

தந்தைக் கொலைசிவ தர்மமாச் சேய்ஞலூர்
வந்தபிள்ளை யார்க்கருளு மாமருந்து - சுந்தரர்முன்
ஞாற்றினிலிட் டுக்குளத்தி லாய்ந்தெடுத்த பொன்சேயான்
மாற்றுரைத்த வாரூர் மருந்து. (அ0)

சேரர் பெருமானார் செய்ம்மும் மணிக்கோவை
யேரமையக் கேட்டமருந் தேயர்கோன் - சீர்வயிற்றுச்
சூலைநம்பி போய்த்தீர்க்கச் சொன்மருந்து செங்கழுநீர்
மாலைபுனை யாரூர் மருந்து. (அக)

சீத்தி மதுரையிற்கை தேய்த்ததிருத் தொண்டரா
மூர்த்திக் கரசளித்த முன்மருந்து - பூர்த்திநமி
நந்திநீ ரால்விளக்கு நன்கெரிக்கச் செயமருந்து
வந்துவிண்கு மூரூர் மருந்து. (அ௨)

மாமணத்தின் மானக்கஞ் சாறனார் மாமகளார்
பூமணக்கும் கூந்தனம் பூணூலுக - காமென்
றரிந்து வளர் வித்த வருமருந்து நாகம்
வரிந்தவளை யாரூர் மருந்து. (அ௩)

அன்புருவாங் காரைக்கா லம்மைதிரு வந்தாதி
யின்புறக் கேட்ட மருந் தேர்முரு - கன்பூண்டி

பிறக்கவர்ந்த பொன்னம்பி பேத்தத் தருமருந்து
மறக்கலந்த வாரூர் மருந்து. (௮௪)

உதியர்பிரான் வன்றொண்ட ரோடையா றேக
நதிவிலகி மேற்புறத்தி னண்ணி - வதியுதவ
வாற்றுமருந் தொண்மன்றத் தாடுமருந் தென்றவலை
மாற்றுமருந் தாரூர் மருந்து. (௮௫)

தாலி கொடுத்தெதிரோ சாருங் கிலியத்தை
பேலக கொடுதூப மிட்டுவந்த - நூலணிந்த
மார்பனையிற் சென்றுண்க மாவெற்ற னைமருந்து
வாரபுகழா ராரூர மருந்து. (௮௬)

கழுத்திற் கயிறு கலையனூர் பூண்டன்
றிழுத்தபினோ நின்றமருந் தியாரும் - வழுத்தக
குருந்தடியில் வாதவூர்க் கோமானை யாண்ட
மருந்துதிரு வாரூர் மருந்து. (௮௭)

ஆரூர்ப் பிறந்தார்க ளாருநமி நந்திநஞ்
சீரூர் கணங்களெனச் செப்புமருந் - தேரூரு
மாண்பனை காய்க்க வருளுமருந் தாரருள்சோ
மாண்பகலா வாரூர் மருந்து. (௮௮)

வேனில்வெப பந்தவிர வெள்ளியமுத் தின்பந்தா
மேனிழற்ற வேணுபுர வேந்தர்க்குத் - தானளித்த
தண்மருந்து சங்கத் தமிழ்ப்புலவ ரோடாய்ந்த
வண்மருந் தாரூர் மருந்து. (௮௯)

நாகைககா ரோணத்தி ஞவலூர் நம்பிக்கு
வாகைப் புரவிமணி மாலேமுத - லோகையொடு
தநத மருநதினைசை சாாமாறா முனபசித்து
வநதமருந தாரூர் மருந்து. (கூ0)

இநதனம் தாங்கி யெழின்மதுரை மாமறுகில
வநது விலேபகாநத மாமருநது - சநதமலி
போதந தருமருநது பூவணத்திற் செனறிரநத
வாதஞ்சிசெ யாரூா மருநது. (கூக)

ஆறு சுவையமுத மஃபின முகமனொடு
நாறு குழறகொளிரி நலகூட - வீறுபெற
வுண்ட முதிடமருந தொணகாளே யாயமழுவா
மண்டமுகா ராரூா மருநது. (கூ௨)

மலையந துவசனபொன் மாலேயோ டாட
வலேயநதி யோரோ முறைழதத - நிலேமருந
தட்டசிததி மாத ராுவாக கருண்மருநது
மடடவிழதா ராரூா மருநது. (கூ௩)

சியகத்தைச சிமபுளாயச செறறமருந தணடருட
லங்கத்தைப பூண்ட வருமருநது - திஙகளொடு
கங்கை யணிமருநது காமா மலேபயநத
மங்கைசே ராரூா மருந்து. (கூ௪)

மாமை திகழ்மருந்து மாலேத் துழாயணிநத
வாமை முதுகோ டணிமருந்து - காமனுயி

ரன் பிரதி வேண்ட வருண்மருந்து வீதிதொறு
மன்றுதிக ழாரூர் மருந்து. (௯௫)

மழுவா ளெறிபத்தர் மாய்த்தகைம்மாப் பாகர்
தொழுமா றருளுமருந் தின்பின் - வழுவா
வலர்சீர் சிவகாமி யாண்டார்பூங் கூடை
மலர்சேர்ந்த வாரூர் மருந்து. (௯௬)

சிலந்தி யரசாகக் கோச்செங்கண் ணென்று
நலந்திகழத் தோன்றியரு ணண்ணி - வலந்திகழு
வாகுதனி மேவி யமரு மருமருந்து
மாகநவி லாரூர் மருந்து. (௯௭)

நலம்பொலியுஞ் சேரர்பிரா னனைத்துமெச்சாலப் பாதச்
சிலம்பொலிகேட் பித்தருளின் செல்வ - வலம்பொலிநன்
றுவலூர்க் கோலனைய நல்குமருந் தம்பொழில்வாய்
மாவலூ ராரூர் மருந்து (௯௮)

திருமருகற் செட்டிவிடந் தீர்ந்துய்யச் செய்த
வருமருந்து வேணுபுரத் தனயர்க் - கிருந்திதே
தோடங் கனைசேர வுந்துமருந் தம்பொன்செய்
மாடமலி யாரூர் மருந்து. (௯௯)

திருமருந்து வேதச் சிரமருந்தா னந்தந்
தருமருந்தென் கண்ணோய் தவிர்க்கு - மருமருந்து
தேமருந்து நேருந் தியாகேச னென்னும்போ
மாமருந் தாரூர் மருந்து. (௧௦௦)

## பயன்.

மருந்துமருந் தென்றுகவி மாலை புனைந்தேன்
வருந்துமெளி யேனின்னல் மாற்றி - யிருந்தன்
பெருமா புகழ்பாடும் பேராத செல்வந்
தருமாரூர் வாழ்தியாகே சன். (௧0௩)

திருச்சிற்றம்பலம்.



## சிறப்புப்பாயிரம்.



திருந்துபுக ழாரூர்த் தியாகேசன் றன்னை
மருந்துமருந் தென்றினிது வாழ்த்திப் - பொருந்துதுதி
சாற்றுந் தியாகரா சக்கவிஞற் கியாமெலலா
மாற் [illegible]



திருவாரூர் மருந்து வெண்பாமாலை
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



தியாகேசன் றிருவடிவாழ்க.

௨

சிவமயம்.



# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௧௦ | நம்மா | நம்பா |
| ௯ | ௭ | வெய்ந்த | வெந்த |
| ௧௦ | ௧௫ | குன்கண் | குன்றுகண் |
| ௧௮ | ௧௯ | கைலா | கயிலா |
| ௨௪ | ௧௬ | வான் | வாள் |
| ௩௦ | ௬ | பணி | பிணி |

